" வதிலையின் கவிதைகள் நிறையவே கனமான விஷயங்களை பேசும்.சமீபத்திய அவரது இந்த கவிதைகள் என்னுள் பற்பல சிந்தனையை கிளறியது.இந்த மூன்று படைப்புகளிலும் அவரின் சமுதாய பார்வை மிக ஆழமாய் இருக்கிறது.Peaceful co- existence பற்றி பேசும் இறுதி கவிதையில் மாறு பட்ட சித்தாந்தங்கள் இருப்பது தவிர்க்க இயலாது ; சேருமிடம் தெரியா இரு வேறு பயணங்களை மனித இனம் தவிர்க்க இயலாது என abstract ஆக சொல்லி இருந்த கவிதை காரணத்தால் மீண்டும் கரப்பை கவிதையும்,எலி கவிதையும் திரும்ப ஊன்றி படித்தேன்.ஒரு சிறுகதை சொல்லும் கருத்தை மிக எளிதான கவிதையில் சொன்னது மகிழ்வை தந்தது.இந்த கவிதைகளை தனியாக கவுரவிக்க எழுந்த ஆசையின் விளைவுதான் இது ..."

அ.நாகராசன்

## இலா கரப்பைகள்....



ஊர்ந்து கொண்டிருகின்றன..
கரப்பான் பூச்சிகள்.
அடுப்பங்கரைதான்
அவைகளுக்குச் சொர்க்கம்.
இங்கிருந்துதான்
வீடு முழுக்க
கரப்பான் பூச்சிகளின்
ராஜநடை தொடங்குகிறது.
மீண்டும்
அடுப்பங்கரைதான்
அவைகளின்
அடைக்கல பூமி!
இரவில்

யாருமில்லாத பொழுதில்
சுதந்திரம் பற்றி
கதைத்துக் கொள்ளும்.
இன்னமும்
இந்த
கரப்பான் பூச்சிகள்
ஊர்ந்து கொண்டிருகின்றன..
அடுப்பங்கரைக்கும்,
அறைகளுக்குமாக..

•••

## கவிதை பற்றிய என் கருத்து....

கவிதையின் பாடு பொருள் கரப்பைகள் என்றாலும் அதன் பேசு பொருளாய் நான் Home maker என்கிற இல்லத்தரசிகளின் அவல நிலையை தான் பார்க்கிறேன்.வீடு முழுக்க ராஜா நடை போட்டாலும் அடுப்படிதான் இவர்களின் ராஜ்ஜியம்.இரவின் தனிமையில் சுதந்திரம் பற்றி பேசும் இவைகளின் வாழ் நாளில் பயணிப்பது அடுப்படிக்கும் பள்ளி அறைக்கும் மட்டுமே.புகை படம் இதை தெளிவாக காட்டுகிறது.ஒரு கையில் குக்கர் மூடி,ஒரு கையில் லெக் பீஸ்,ஒரு கையில் பிரஷ் என்று இல்லத்தரசியின் எழுந்தது முதல் தூங்கும் வரை படும் இன்னலை புகை படமும் விளக்குகிறது.

## கவிதை-2

## எலிகளின் மறைவிடம்...

எலிகள்தான்..
கொறித்துப் போட்டது..
வீடு முழுக்க
சிதறிக் கிடந்தன..



குதூகலித்தோடும்
எலிகள் நிறைந்த
வீடு
நிறைந்திருக்கிறது.
பாத்திரம் உருட்டும்
எலிகள்..
நாற்காலியில்
ஒய்யாரமாய் கண்ணுருட்டும்
எலிகள்..
நீண்ட வாலால்
விளையாட்டுக் காட்டும்
எலிகள்..
இப்படி...
எலிகள் உலகம்
வீடு முழுக்க..
ஆனாலும்,
எலிகளுக்குத் தெரியும்
இந்த வீடு
பூனைகள் இல்லாத
வீடென்று..

## கவிதை பற்றிய என் கருத்து....

ஒரு தனி மனித சுதந்திர ஆசையை இந்த கவிதையில் பார்க்கிறேன்.மரண பயம்,வயிற்று பசி , இருப்பிடம் பற்றிய பிரக்ஞை,நாளை எனும் அச்சம் போன்ற சராசரி கவலை துறந்து கன்றுக்குட்டியாய் துள்ளி குதிக்கும் குதூகல நிலை.எலியும் பூனையும் ஒரு சிம்பல் என்கிற நிலை தாண்டி வாழ்வின் ஆராயா பக்கங்களை காட்ட முற்படுவது கவிதையின் சிறப்பு.
கவிதையிலும் புகை படத்திலும் நீண்ட வாலால் பெரிய எலி வரும் சந்ததியினரை வாழ்க்கை வாழ்வதற்கே வா என்று அழைப்பது தெரிகிறது.
கதவு தாண்ட வேண்டும் வரும் தலை முறை... .

****

### கவிதை-3

**மாற்றுத் தடங்கள்..**

உன்
பாதை வேறு.
என்
பாதை வேறு.

உன் பாதை
உனக்கானது.
என் பாதை
எனக்கானது.
அவரவர் பாதை
அவரவர் பாடு.
வா..
அவரவர் பாதையில்
செல்வோம்.
நேரான
என் பாதையிலும்,
வட்டமான
உன் பாதையிலும்.



## கவிதை பற்றிய என் கருத்து....

அவளுக்கு அல்லது அவர்களுக்கு Beaten Track என்ற வட்ட பாதை பிடித்து இருக்கிறது .ஆனால் நான் பயணிக்க விரும்புவது தனி ஒரு புதிய பாதையை.நாம் சந்தித்துக் கொள்ளவதில் பிரச்சனை வரலாம். ஏன் சந்திப்பு சாத்தியப்படாமலே போகலாம். அனாலும் இருவரின் இருத்தலும் இறுதியானது.மாற்றத்தக்கதல்ல.உன் வழி நீவீர்.என் வழி நான்,நல்ல abstract கவிதை.பலருக்கும் பல வித பொருளில் அந்த அவர்கள் வருவார்கள்.

# சமர்ப்பணம்

*இப்படி ஒரு முயற்சிக்கு வித்திட்ட முக நூல் நண்பர் கிரிஷ் ராமதாஸுக்கு...*